திருச்சிற்றம்பலம்.

# முகவுரை.

"வாழ்க வந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனு மோங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே."

உலகத்திலுள்ள பல சமயங்களையுந் தனக்குச் சோபானங்களாகப் பெற்று அவற்றிற் கெல்லாந் தாய்ச்சமயமாக விருப்பது சுத்தாத்துவித சித்தாந்த சைவசமயமேயாக விருந்தும், இச்சமயம் தக்கபரிபாலனமின்மையால் மிகவுங் குன்றியிருக்கின்றது இப்போதுள்ள சைவசமயிகளுள் பெரும்பாலார்க்குச் சைவசமயானுட்டானங்களுஞ் சைவசமயநூலுணர்ச்சியும் மிகவும் அபூர்வமாயிருக்கின்றன. இதனால் இவர்கள் "நிலத்தியல் பானீர் திரிந்தற்றா மாந்தர்க்—கினத்தியல்பதாகு மறிவு" என்னுந திருக்குறளுக்கிணங்க எந்த எந்த மதத்தவருடன் கூடி எந்த எந்த நூல்களைக் கற்கிறார்களோ அந்த அந்த மதத்தார்களின் நடையுடைபாவனைகளை யனுசரிக்கின்றார்கள் இவர்களுள் பலர் சைவசமயாநுட்டானங்களுக்கும் பிறசமயாநுட்டானங்களுக்குமிடையிலுள்ள வேற்றுமைதெரியாமல் எல்லாச்சமயாநுட்டானங்களும ஒன்றேயாமெனக்கொண்டு பெருங்கூட்டங்களாகக் கூடி மகமதியர் கொண்டாடும் அல்லாபண்டிகையைத் தங்கள் அரும்பெரும் பண்டிகையாகக்கொண்டாடுகிறார்கள். மகமதியரின் மசூதிகளிலும், கிறிஸ்தவர்களின் மாதாகோவில்களிலும், பர்மாதேசத்துப் பையாகோவில்களிலும் பிரார்த்தனை செலுத்தி வணங்குகின்றார்கள். பலர் எச்சமயாநுட்டானமுமின்றிப் பல தீயொழுக்கங்களே தங்கள் சமயாநுட்டானமாகக்கொண்டிருக்கின்றார்கள். சைவசமயாநுட்டானங்கள் இவ்வாறு தலைகீழாய் மாறியிருப்பது வெள்ளிடைமலைபோலத் தெரிவதாயிருந்தும் நம்மவர்களுள் சிலர் "சைவசமயமானது எக்காலத்துங்குன்றாமல் என்றும் ஒரேபடித்தாய் நிலைபெற்றிருக்கும்" எனவும், சிலர் "சைவசமயமானது முழுமுதற்கடவுளாகிய சிவபெருமானாலேயே உண்டாக்கப்பட்டு அவரையேதெய்வமாகக்கொண்டிருத்தலால் எக்காலத்தும் அழியாது" என்றும், சிலர் "பலகோடி ஜன்மங்களிற்செய்த புண்ணியமுடையார்க்கே சைவசமயாநுட்டானமுண்டாகுமாதலால் மனிதர்முயற்சியாற் சைவசமயம் அபிவிருத்தியடையாது" என்றும், சிலர் "அரசாங்கங் கிறிஸ்தவவரசாங்கமாயிருத்தலினாற் சைவசமயம் இனி சீவிப்பது அடினம்" என்றும், சிலர் "நம்மவர்கள் கிறிஸ்தவர்களைப்போற் செல்வர்க

ளாயிராமல் தரித்திராராயிருத்தலினால் சைவசமயபரிபாலனஞ் செய்வது அசாத்தியம்'' எனவும், சிலர் ''கலிகாலத்தில் வருணாசிரமதருமங்கள் தலைகீழாயிருக்குமாதலாற் சைவசமயம் ஓங்காது'' எனவும், சிலர் ''சைவசமயிகளிடத்தில் ஒற்றுமையின்மை அளவுகடந்தசாதியபிமானமுதலிய துர்க்குணங்கள் மலிந்திருப்பதினால் இனிச் சைவசமயம் ஓங்குவதேது?'' எனவும், சிலர் ''கோவில்களைக்கட்டுவதும் ஆடம்பரமான உற்சவங்களைச் செய்வதுமே போதும்'' எனவும், சிலர் ''அவரவர்கள் தங்கள் தங்கள் வரையில் வழிபாடுசெய்துகொண்டிருந்தாற்போதும்'' எனவும், சிலர் ''கழுவுதலும் மெழுகுதலும உண்ணல் முதலியவற்றிலேயாசாரம் பாராட்டுதலுமே சைவசமயபரிபாலனமாம்'' எனவும், சிலர் ''பிறசமயங்களைக் கண்டித்துச் சைவசமயத்தின் ஏற்றத்தைப் பிரசங்கித்தலே சைவசமயபரிபாலனச் செய்கையாம்'' எனவும், சிலர் ''சைவசமயிகளுக்குத்தானே மோட்சம் மற்றச்சமயிகளுக்கில்லையோ'' எனவும், சிலர் ''சமயபேதம்பாராட்டுவது தேசாபிவிருத்திக்குக் கெடுதியாதலால் நம்மவர்கள் எச்சமயத்தையனுசரித்தாலென்ன?'' எனவும், இன்னும் பலர் பலவிதமாகவுஞ் சொல்லிக்கொண்டு கல்வியும் நாகரீகமுமற்ற சாதியாரைபபோல் கிறிஸ்தவர்கள் முதலாயினோர் சைவசமயானுட்டானங்களை யழித்துத் தங்கள் சமயானுட்டானங்களை யபிவிருத்திசெய்வதைக கண் கூசாமலும் மனம் நடுங்காமலும் பார்த்துக்கொண்டு, சைவசமயம் இன்னுங் குன்றாமல் இனிமேலாயினும் அபிவிருத்தியடைவதற்கான சாதனங்களைச் செய்துகொள்ளுதற்பொருட்டு நெஞ்சத்தவலமிலராக விருக்கின்றார்கள். சைவசமயமானது என்றும் ஒரேபடித்தாயிருக்குஞ் சமயமெனப பெரியோர்கள் கூறியது சைவசமயககொள்கைகள் பிறசமயக்கொள்கைகளைபபோலக் காலதேசவர்த்தமானங்களின்படி மாறுபடுந்தகையனவல்லவென்பதைக கூறியதாகுமேயன்றி சைவசமயம் (அதாவது சைவசமயானுட்டானங்கள்) எக்காலத்துங் குன்றாதெனக கூறியதாகமாட்டாது ஆன்மாக்களின் கன்மவேறுபாடுகளின்படி ஒவ்வொரு சமயமும் ஒவ்வொரு காலத்திற் பெருகுவதுஞ் சுருங்குவதுமாக விருக்கும். சைவசமயமும் பலமுறை பெருகியுஞ் சுருங்கியுமிருந்தது இதுபற்றியே;—

''தோல்வியும் வெற்றியுஞ் சொன்மதங்கட் கெலாங்
காலபேதத்தினுண் டாதீபற
கருத்தன் செயலதென் றுந்தீபற''

என அவிரோதவுந்தியாரிற் கூறப்பட்டது. கந்தபுராணம் பாயிரப்படலத்தில்

''முந்தொருகாலத்தின் மூவுலகந்தன்னில்
வந்திடுமுயிர்செய்தவல்வினையதனாலே
யந்தமில்மறையெல்லாமடிதலைதடுமாறிச்
சிந்திடமுனிவோருந்தேவருமருளுற்றார்.''

"கருமணிமிடறுடைக்கடவுளின்னுநீ
யருளுவதொன்றுளததனைக்கூறுவ
னிருநிலமேலவர்யாருநின்றனைப்
பரமெனவுணர்ந்திலர்மாயைப்பான்மையால்"

"ஆற்றுறுபுனல்படிந்தழுக்குநீக்கலார்
சேற்றிடைவீழ்ந்தெனமறைகள்செப்பிய
நீற்றொடுகண்டிகைநீக்கிவன்மையால்
வீற்றொருகுறிகொடுமேவுவார்சிலர்"

என்பன முதலான செய்யுட்களாலும், பெரியபுராணச்சரித்திரங்களாலும்,

"சொற்கோவுந்தோணிபுரத்தோன்றலுமென்சுந்தரனுஞ்
சிற்கோலவாதவூர்த்தேசிகனும்—முற்கோலி
வந்திலரேனீறெங்கேமாமறைநூலெங்கே
எந்தைபிரானைந்தெழுத்தெங்கே"

என்னுஞ் செய்யுளாலும், சைவசமயம் பலசமயங்களிற் குன்றிப் பின் அபிவிருத்தி யடைந்தமை நன்கு புலப்படும் அன்றியும் மகமதிய வரசாட்சியில் நம்முடைய வாலயங்களும், மடங்களும், கல்விச்சாலைகளும், பண்டாரங்களும், நாசமடைந்து நம்மவர்கள் கோடிக்கணக்காக மகமதியரானார்கள். மகமதியராசாட்சியில் அவர்கள் நமது சமயத்தை யழித்தலையே பரம தருமமாகக்கொண்டு அவ்வாறு செய்தும் நம்மவர்கள் பலர் அக்காலத்தில் தங்களுயிரைப் பறிகொடுத்தாயினுந் தங்கள் சமயாநுட்டானங்களைக் கைவிடாதிருந்தார்கள் அன்றியும், அக்காலத்தில் நமது சுயபாஷைகள் ஆதரிக்கப்பட்டு வந்தமையால் நம்மவர்கள் நமது சமய நூல்களைக் கற்பதையுங் கைவிடவில்லை. இக்காலத்தில் நம்மவர்கள் ஆங்கிலங் கற்பதையே பெரிதாக மதித்துத் தங்கள் சுயபாஷையை அறவே கைவிட்டார்கள், இபபோது நம்மவர்கள் பலருக்குத் தங்கள் தாய்பாஷைகளில் இலக்கணப பிழையின்றி ஒருவாக்கியம் எழுதவுந் தெரியாது, சிலர் பிழையின்றித் தங்கள் பெயரை யெழுதுவதுங் கடினமாயிருக்கிறது சிலர் சுயபாஷையிற் பேசுவதைக் கௌரவக் குறைவாகவும் ஆங்கிலத்திற் பேசுவதை மிகவுங் கௌரவமாகவும் எண்ணுகிறார்கள். இதனால் இவர்களுக்குச் சமயநூற்படிப்பின்றிச் சைவசமயாபிவிருத்திக்கே முழுமோசம் வந்துவிட்டது. சைவசமயத்தின் தற்கால நிலைமை யிவ்வாறிருக்க நம்மவர்கள் நமது சைவசமயம் குன்றாமற் செழித்திருப்பதாகக் கனவு கண்டுகொண்டே நித்திரை செய்துகொண் டிருத்தலினால் இவர்களைத் தூக்கத்தினின்று மெழுப்பி இவர்கள் நிலைமையை விளக்கிக் காட்டுதல் மிகவு மத்தியாவசியமென வுட்கொண்டு டிஸ்ட்ரிக்ட்முனி

சிப் ஸ்ரீமான் ஜே. யெம். நல்லசாமிப்பிள்ளை யவர்கள் "சைவ சமயிகளின் கடமை" என்னும் விஷயமாக ஒருவியாசமெழுதி 1910ஞு டிசம்பர் மாதத்தில் இராமநாதபுரத்திற் கூடிய சைவசித்தாந்த மகா சமாஜக் கூட்டத்தில் வாசிக்கும்படி பிரேரேபித்தார்கள். இதைக்கற்றவர்கள் மதிக்க எழுதுமாற்றல் எனக்குச் சிறிதும் இல்லையாயினும் பிள்ளையவர்களின் பிரேரேபனையை மறுக்கமாட்டாமல் எழுதி பலர்க்கும் பயன்படும்படி அச்சிட்டமையால் பெரியோர்கள் இதிற்காணும் எவ்வகைக் குற்றங்களையும் மன்னிக்கப் பிரார்த்திக்கின்றேன்.

இங்ஙனம்,

இ. ஆதிமூலமுதலியார்.

கணபதி துணை.

# சைவசமயிகளின் கடமை.

சைவ சமயிகளாவார் சிவபெருமானே முழுமுதற்கடவுளெனவும், வேத சிவாகமங்கள் அவரருளிச்செய்த முதனூல்களெனவும், அவற்றுள் வேதம் பொதுநூலெனவும், சிவாகமஞ் சிறப்புநூலெனவும், பதி பசு பாசம் அநாதி நித்தியமெனவுங் கொண்டு, அவற்றின்படி கடவுளை வழிபடுவோராவர். சைவசமயிகளின் கடமையை விளக்கக் கூறவேண்டுமாயின் சைவசமயத்தின் தற்காலநிலைமையைக் கூறுவதும் ஆவசியமாம். சைவ சமயத்தின் தற்காலநிலைமையைச் செவ்வனே யறியவேண்டுமாயின் அதைப் பிறசமயங்களின் நிலைமைகளோடு ஒத்துப் பார்ப்பதும் அத்தியாவசியமாம். பிறசமயங்கள் எண்ணிறந்தனவா யிருத்தலினால் அவற்றையெல்லாந் தனித்தனியாக உதகரிக்காமல் இக்காலத்தில் மிகவும் பரவியிருக்குங் கிறிஸ்து சமயம், மகமதியசமயம் புத்தசமயம் என்னும் மூன்று சமயங்களை மாத்திரம் பற்பல விஷயங்களிலும் உதகரித்து ஒவ்வொருவிஷயத்திலும் சைவசமயிகளாகிய நாம் செய்யவேண்டிய கடமைகளைக் கூறத்தொடங்குகின்றேன்.

## சமயபரிபாலன அமைப்பு.

கிறிஸ்தவர்களுள் உரோமன் கத்தோலிக் என்னும் வகுப்பார் போப் என்பவரைப் பெருந்தலைவராகக் கொண்டு, அவர்கீழ் படிப்படியாக உயர்ந்தவர்களுந் தாழ்ந்தவர்களுமான பல தலைவர்களைப் பலவிடங்களில் வைத்து உலகெங்குங் கிறிஸ்து சமய பரிபாலனஞ் செய்கிறார்கள் - புத்தர்களுங் கிராண்டுலாமா என்பவரைப் பெருந்தலைவராகக் கொண்டும் அவர்கீழ்ப்பலதலைவர்களைவைத்தும் பலதேசங்களிற் புத்தசமய பரிபாலனஞ் செய்கிறார்கள் - கிறிஸ்தவர்களுள் பராடெஸ்டாண்டு வகுப்[illegible] மகமதியர்களும், அரசர்களையும் பலமடாதிபதிகளையுந் தலைவர்களாகவைத்துக்கொண்டு எங்குஞ் சமயபரிபாலனஞ் செய்கிறார்கள். அல்லாமலும், கிறிஸ்தவர்கள் உலகெங்குஞ் சபைகளைவைத்துக் கிறிஸ்து சமய பரிபாலனஞ் செய்கிறார்கள். சைவ சமயிகளாகிய நம்மவர்களும் முற்காலத்தில் அரசர்களையும் மடாதிபதிகளையுந் தலைவர்களாகப்பெற்று சைவசமய பரிபாலனம் பண்ணிவந்தார்கள். இக்காலத்தில் நமது சைவசமயமானது அவ்வாறு அரசர்களாலேனும், மடாதிபதிகள் முதலிய ஜனத்தலைவர்களாலேனும், சபைகளாலேனும் பரிபாலிக்கப்படாமல் அரசனற்ற தேயம்போலவும், தளகர்த்தனில்லாச் சேனா சமூகத்தைப் போலவும், மீகாமனில்லா மரக்கலம்போலவும் அழிகின்றது. இதனால் நாம் செய்யவேண்டிய முக்கிய கடமை யென்னை வெனில் நமதுசமயத்திற்

டிய கடமையாகவும் எண்ணவேண்டும். சிலர் சமயவேற்றுமை பாரா ட்டுதல் தேசாபிவிருத்திக்குக் கெடுதியாகுமென நினைக்கிறார்கள். இப்படி நினைப்பது பெருந்தவறு. சமயாபிவிருத்தியே ஜனங்களின் நல்லொழுக்கத் திற்குக் காரணமாம் தேசாபிவிருத்திக்கு நல்லொழுக்கங் காரணம். ஆத லால் தேசாபிவிருத்திக்குஞ் சமயாபிவிருத்தியே மூலகாரணமாகும். அல் லாமலும் முற்காலத்தில் ஐரோப்பியர்களுள் ஒருவகுப்புக்கிறிஸ்தவர்கள் மற் றொருவகுப்புக்கிறிஸ்தவர்களை விரோதித்துப் பெரும்போர்விளைத்துக்கொண் டிருந்தமை அவர்கள் தேசசரித்திரங்களினால் அறிகிறோம். அவர்கள் இன்னும் அவ்வித விரோதங்களைப் பாராட்டிக்கொண்டே தேசாபிவிருத்திசெய் யவில்லையா?

## செல்வம்.

உலகத்தில் செல்வர்களாவார் தாங்கள் முன்னுவயாவையும் எளிதிற் செய்யக்கூடியவர்களாயிருக்கிறார்கள். கிறிஸ்தவர் முதலானவர்கள் அரசா ட்சியிலும் கல்வி கைத்தொழில் வர்த்தகம் முதலியவற்றிலுஞ் சிறந்து சர் வைசுவரிய சம்பன்னர்களாயிருக்கிறார்கள். அவர்களுக்குமுன் நம்மவர்கள் மிகவுந் தரித்திரராயிருப்பதனால் அவர்களைப்போல் நாமும் சமயபரிபால னஞ் செய்வது கடினமெனச் சிலர் நினைக்கிறார்கள். நாம் அவர்களைப்போல் இப்போதே உலகெங்குஞ் சென்று சைவபரிபாலனஞ்செய்வது கூடாமை யாயிருக்கலாமேயன்றி நமது சுயதேயத்தில் நம்மளவிலாவது செய்துகொள் வது கூடாதகாரியமன்று. ஐரோப்பியர்கள் நமது தேசத்திற் பெருஞ்செல விட்டுச் செய்யுங் காரியங்களை நாம் சொற்பசெலவிற்செய்து கொள்ளலாம். அல்லாமலும் பொய்யை மெய்யாகக்கூறுவதே பெரும்பிரயாசையன்றி மெ ய்யை மெய்யாகக் கூறுவதிற் பிரயாசையில்லை. ஆயினும், நம்மவர்கள் "மெய்யுடையொருவன் சொல்லமாட்டாமையால் பொய்போலும்மே பொ ய்போலும்மே" என்றவாறு "பொய்கண்டார்காணுப்புனிதமெனுமத்துவித" மெய்யை நெடுங்காலமாகக் காலதேசவர்த்தமானங்களை யனுசரித்து விளக்க மாட்டாமல் பொய்யாகவைத்திருக்கிறார்கள். இக்காலத்தில் பலதேசத்த வர்களுள்ளுங் குருட்டுச்சமயாபிமானமின்றி மெய்ச்சமய வாராய்ச்சியிற் பே ரவாவிருத்தலினால் நாம் இனி வெகுலேசாக சைவசமயாபிவிருத்தி செய்ய லாம். அல்லாமலும் நமது தேசத்தார் பெரும்பாலுந் தரித்திரராகவிருந்தா லுந் தருமசிந்தையுடைய செல்வர்கள் பலரில்லாமற்போகவில்லை; சந்ததியில் லாதவர்கள் பலர், தங்கள் திரவியத்தைப் பலதருமங்களுக்கு வைத்துவிடுகி றார்கள். நமது சைவமடங்களில் எவ்வளவோ திரவியமிருக்கிறது. பெரு ந்தொகை கொடுக்கமாட்டாதவர்கள் பலர் தங்களாலியன்றது உதவிசெய்தா லும் "பலதுளிபெருவெள்ளம்" என்றபடி செல்வம் பெருகிவிடும். அல்லா மலும், நமது ஜனங்களுக்குள் சமயாபிமானக்கிளர்ச்சியுண்டாகவிட்டால் அவர்கள் எவ்வளவேனும் உதவிசெய்யப்பின்னிடமாட்டார்கள். ஆதலால்

ஜனத்தலைவர்கள் வெளிவந்து ஜனங்களுக்குள் சமயாபிமானக்கிளர்ச்சியை யுண்டாக்கிச் சபைகளைவைத்து ஒழுங்காகச்சமயபரிபாலனம் பண்ணினால் வேண்டியபொருள்கிடைக்கும். எளிதில் சைவசமயாபிவிருத்தி செய்யலாம்.

நம்முன்னோர்கள் உலகவாழ்க்கையைப் பொருளெனமதியாமல் சகல மூந்துறந்து சைவசமயமாகிய அழியாப்பொக்கிஷத்தைக் காப்பாற்றி நம க்கு ஆஸ்தியாக வைத்திருக்கிறார்கள். இப் பொக்கிஷமே உலகை வெல்ல வல்ல ஞானவாளுமாகும். இதுபற்றியே ஸ்ரீமன் மாணிக்கவாசகசுவாமி களும்:—

"ஞானவாளேந்துமையர்நாதப்பறையறைமின்
மானமாவேறுமையர்மதிவெண்குடைகவிமின்
ஞானீற்றுக்கவசமடையப்புகுமின்கள்
வானவூர்கொள்வோநாமாயப்படைவாராமே."

எனவும்,

"தொண்டர்காடுசெல்லீர்பத்தர்காள்சூழப்போகி
ரொண்டிறல்யோகிகளேபேரணியுந்தீர்க
டிண்டிறற்சித்தர்களேகடைக்கூழைசென்மின்க
ளண்டர்நாடாள்வோநாமல்லற்படைவாராமே."

எனவுந் திருவாய்மலர்ந்தருளினார்கள். நாம் இவ்வுபதேசத்தைக் கடைப்பி டித்துச் சபைகளை வைத்துச் சைவசமயபரிபாலனம் பண்ணுவோமானால் நாமும் நம்முடையசந்ததியார்களும் மற்றவர்களும் மண்ணுலகமாத்திர மன்றி விண்ணுலகத்தையுமாளலாம்.

## வியாபகம்.

உலகத்தில் வியாபகமுடையார் மேலுமேலும் வியாபகஸ்தராதற்குந் தங்களினுங் குறைந்தவியாபகமுடையாரை யடக்கியாளுதற்கும் வல்லமையு டையவர்களாயிருக்கிறார்கள். ஆதலாற் சைவசமயம் எம்மட்டில் வியாபக மடைந்திருக்கிறதென்பதைப் பிறசமயங்களின் வியாபகங்களோடு ஒப்பிட் டுப்பார்ப்பது அவசியமாம். உலகத்தில் ஏறக்குறைய எல்லாக்கண்டங்களி லுங் கிறிஸ்துசமயம் வியாபித்திருக்கிறது. மகமதியமதமும் ஆபிரிக்காகண் டத்தின் வடபாகத்திலும் ஆசியாவில் ஆப்கானிஸ்தானம் பெலுசிஸ்தானம் துர்க்கிஸ்தானம் பாரசீகம் அராபியா துர்க்கி முதலான தேசங்களிலும் இவ்விந்தியாவிலும் பரவியிருக்கிறது. புத்தமதமும் மங்கோலியா மஞ்சூ ரியா கொரியா திபேத்து சீனு ஜப்பான் முதலான தேசங்களிலும் இவ்விந் தியாவிலும் பரவியிருக்கிறது. நமது சைவசமயமோ வெனில் இவ்வொரு தேசத்தில் எண்ணிறந்த சமயங்களினிடையில் ஒளிமழுங்கியிருக்கின்றது. மேற்கூறிய சமயங்களின் வியாபகங்களை நோக்க நமது சைவசமயம் மிகவும்

வியாபகமற்றதாயிருக்கிறது. ஆதலால் இனி நாம் நமது சமயத்தை வியாபக முடையதாகச் செய்துகொள்ளவேண்டும். இவ்வாறு செய்துகொள்வதற்கு மேலே கூறிய சமயபரிபாலன அமைப்புஞ் சபைகளுமே முக்கிய சாதனங்களாகும். அன்றியும், நாம் பலமுறையும் பலவிடங்களிலும் இச்சைவசித்தாந்தமகாசமாஜத்தைப்போன்ற பெருங்கூட்டங்கள் கூட்டிப் பலதேயத்தவர்களேயும் மதத்தினர்களேயும் வருவித்துச் சைவசமய உண்மைகளே விளக்கிக்காட்டவேண்டும். வருடந்தோறுஞ் சைவசமயமகோற்சவங் கொண்டாடிப் பல சைவசபைகளே வருவித்து அவைகள் செய்யுஞ் சமயாபிவிருத்தியையும் ஆலயங்கள் மடங்கள் முதலியவற்றின் செய்கைகளேயுங் கவனித்து அவைகளின் நிலைமைகளே யச்சிட்டு வெளியிடவேண்டும். பல விடங்களுக்குஞ் சைவசமயப் பிரசாரகர்களே யனுப்பி சமயபோதனைசெய்வித்தல்வேண்டும் இதரபாஷைகளில் (முக்கியமாய் ஆங்கிலபாஷையில்) நமது சமய நூல்களே யச்சிட்டுப் பலதேசங்களிலும் பரவச்செய்யவேண்டும். நம்மவர்கள் இதரபாஷைகளேயுங்கற்று அப்பாஷைகளிற் பிரசங்கஞ்செய்தல்வேண்டும். தமிழ்ப்பத்திரிகைகளில் மாத்திரமன்றி இதரபாஷைப்பத்திரிகைகளிலும் நமது சமயவுண்மைகளே வெளியிடவேண்டும், காலதேசவர்த்தமானங்களுக்கிசையச் சமயாசாரங்களும் வருணசாரங்களுங் கவனிக்கப்படவேண்டும். நம்முன்னோர்கள் பரதகண்டமே புண்ணிய பூமியென்றும் இதிற்பிறந்தவர்களே சைவசமயத்திற் குரியாராவரென்றுங் கூறினூர்களாகையால் பிறதேயங்களில் சைவசமயம் ஓங்காதெனச் சிலர் எண்ணுகிறூர்கள். நம்முன்னோர்கள் அக்காலத்து அனுபவத்தின்படி அவ்வாறு கூறினதேயன்றி இக்காலத்தனுபவத்தின்படிக் கூறவில்லை. முற்காலத்தில் சுதேசவரசரின் அரசாட்சியில் வருணச்சிரமதருமங்கள் நடைபெற்றவாறு இக்காலத்தில் நடைபெறவில்லை. இக்காலத்தில் மேல்வகுப்பார் கீழ்வகுப்பாரிடங் குற்றேவல் செய்வதும், கீழ்வகுப்பார்செய்த தொழில்களே மேல்வகுப்பார் செய்வதும், மேல்வகுப்பார் செய்ததொழில்களேக் கீழ்வகுப்பார் செய்வதும் வழக்கமாயிருக்கிறது. பரத கண்டத்திற் சைவசமயம் ஒருபுறம் ஒளிமழுங்கிக் கிடக்கக் கிறிஸ்துசமயம் மகமதிய சமயம் புத்தசமயமுதலிய பலசமயங்கள் எங்கும் பரவியிருக்கின்றன. இதனுல் இக்காலத்துப் பரதகண்டத்திற்கும் ஏனைய தேசங்களுக்கும் வித்தியாசங் காண்பதரிதா யிருக்கின்றது. சைவசமயிகள் தங்கள் சமய ஒழுக்கங்களேயுஞ் சமய பரிபாலனத்தையுங் கைவிட்டிருக்கிறூர்கள். பிறதேசங்களிலோவெனில் சமய ஒழுக்கங்களும் பரிபாலனமும் ஒழுங்காக நடைபெறுகின்றன. மெய்ச்சமய வாராய்ச்சியிற் கவலையதிகரித்திருக்கிறது. மாமிசபட்சணஞ் செய்வோர் பலர் அதைநிராகரித்துச் சுத்தபோஜனஞ் செய்கிறூர்கள். மதுபானத்தை யடியோடே விலக்கியு மிருக்கின்றூர்கள். ஆதலால் இக்காலத்தில் பரதகண்டத்தினர்க்கு மாத்திரஞ் சைவசமயம் உரியதென்று எண்ணுவது கூடாது. மேலும், முற்காலத்தில் நமது சமயநூல்கள் ஏடு எட்டுப் பிரதிகளாயிருந்தன. அவை இப்போது அச்சுவாகனமேறி

உலகெங்கு மூலாவுகின்றன. நமது தமிழ்ப்பாஷையிலில்லாத நமது சமய நூல்கள் ஆங்கிலமுதலிய இதரபாஷைகளில் மொழிபெயர்க்கப்பட்டிருக்கின்றன. மேலும், ஐரோப்பியர்கள் முதலாயினோர் நமது சமயநூல்களைக் கற்று நம்மவர்களுக்கே போதிக்கிறார்கள் நம்மவர்கள் அவர்கள் செய்யுஞ் சமயபோதனையில் அதிகமதிபபு வைத்திருக்கிறார்கள். ஆகையால் நமது சைவசமயம் பலவிடங்களிலும் வியாபக மடையவேண்டுமாயின் பரதகண்டத்தினர்க்கு மாத்திரமன்றி எல்லாத் தேயத்தினர்க்கும் நமது சமய உண்மைகளைத் தாராளமாய்ப போதிக்க வேண்டும். அன்றியும், பிறசமயிகளாக மாறினவர்களைச் சுருக்கமான பிராயச்சித்தஞ்செய்து மீண்டுஞ் சைவசமயத்திற் சேர்க்க வேண்டும். பிறசமயத்தவரை நமது சமயத்திற் சேர்த்துக்கொண்டால் அவர்களுடன் எல்லாவிஷயத்திலும் வித்தியாசமின்றி உறவாடவேண்டுமென்று நம்மவர்கள் சிலர் நினைக்கிறார்கள். இப்படி யெண்ணுவது சரியல்ல. பத்திநெறியில் நிற்போற்குச் சாதிபேதந் தோன்றாது. லௌகிகநெறியிற் சாதிபேதங் கவனிக்கற்பாலதே. சைவசமயிகளுள்ளும் பலசாதியாரிருந்தும் சாதிபேதம் பாராட்டிக்கொண்டே சைவ சமயாநுட்டானங்களை யனுசரிப்பதுபோல், பிறசமயங்களினின்றுஞ் சைவ சமயிகளாக மாறுகின்றவர்களுஞ் சாதிபேதத்தோடே சைவ சமயத்தை யனுசரிக்கலாம். அற்பமாகிய சாதிபேதத்திற்கு லச்சைப்பட்டு ஆன்மலாபத்தை யிழக்கலாமா? சாதிபேதம் பாராட்டாதவர்களாக எண்ணப்படும் ஐரோப்பியருள்ளும் உயர் குடும்பத்தார் தாழ்ந்த குடும்பத்தாரோடு பலசந்தர்ப்பங்களில் நெருக்கமாக உறவாடாமலே தங்கள் சமயாநுட்டானங்களை யநுசரிக்க வில்லையா? ஒருதேசத்தைக் கைப்பற்றவேண்டி மற்றொருதேசத்தார் படையெடுத்து வந்தாலும் ஒரு ஊரில் தீப்பிடித்தாலும் சாதி வித்தியாசம் பாராட்டாமல் ஆபத்து விலக்குவதொன்றையே கருதிப் பலசாதியாருங் கூடித் தங்கள் தேசத்தைக் காப்பாற்றுகிறார்கள். அதுபோல் நமது சமய மானது பிறசமயப் படைகளால் அழிவுறுங்காலையில் நாம் அளவுக்கு மிஞ்சி சாதிபேதம் பாராட்டாமல் சமயபரிபாலனம் பண்ணி நமது சமயம் உலகெங்கும் வியாபக மடையச் செய்து கொள்ள வேண்டும்.

## கீழ்வகுப்பார்.

நெடுங்காலமாக நம்முன்னோர்களுள் மேல்வகுப்பார் கீழ்வகுப்பாரைத் தங்களுக்கு ஏவல்செய்யவைத்துக்கொண்டு அவர்களுக்குச் சமயபோதனை செய்யாமல் ஒதுக்கிவைத்திருந்தார்கள். இது கடைசியாக நமக்குப் பெரும் பழியாகவும் நமது சமயத்திற்கும் தேசாபிவிருத்திக்கும் இடையூறாகவுமுடிந்தது. கிறிஸ்தவர்கள் கீழ்வகுபபார் நிலைமைக்கிரங்கியும், தங்கள் மதத்தை இந்நாட்டிற்பரப்பவேண்டியும் இவர்களுக்குக்கல்விகற்பித்தும் வேண்டிய உதவிகளைச்செய்தும் இவர்களைக் கூட்டங் கூட்டங்களாகக் கிறிஸ்தவர்களாக்கி இவர்களைக்கொண்டே நம்மவர்களுக்குக்கல்விகற்பித்துக் கிறிஸ்துசமய

போதனையுஞ் செய்விக்கிறார்கள். இதை நம்மவர்கள் நேரிற்பார்த்துக்கொண்டிருந்தும் உயர்குலத்தாருக்கே சைவசமயம் சொந்தமெனவும் கீழ்வகுப்பார் எப்படிப்போனாலும் போகட்டும் எனவும் எண்ணிக்கொண்டு கவலையற்றிருப்பது பெருங்குற்றமாகும். ஆதலால் நாம் கீழ்வகுப்பாரைப பலவிதத்திலும் ஆதரித்தல்வேண்டும். அவர்களுக்கும் பாடசாலைகள்வைத்துக் கல்விகற்பித்துச் சமயபோதனையுஞ்செய்யவேண்டும். இப்படிச் செய்தால் இவர்களைக் கொண்டே பிறதேசங்களிலும் நாம் இலேசாகச் சைவசமயத்தை யபிவிருத்திசெய்யலாம். அறியாமையால் பொருள்முதலியவற்றிற் காசைப்பட்டுக் கீழ்வகுப்பார் கிறிஸ்தவர்களாவதையுந்தடுக்கலாம்.

## சுதேசபாஷை.

நமது சைவசமயாபிவிருத்திக்கு நமது சுதேசபாஷாபிவிருத்தி இன்றியமையாமையாம். நம்மவர்கள் 'அரசனைநம்பிபுருஷனைக்கைவிட்டவள்'போல் ஆங்கிலங்கற்கப்புகுந்து தங்கள் தாய்பாஷைகளைக்கைவிட்டார்கள். இதனால் மிகவும் அருமையான நமது சமயநூல்களையும், இலக்கண இலக்கியநூல்களையும், தருக்கநூல் சோதிடநூல் ஆயுர்வேதநூல் முதலிய பல நூல்களையுங் கற்பவரின்றி அவை யழிந்துபோகின்றன. இப்போதுள்ள கல்வியிலாகா சட்டங்களினால் நமது சுதேசபாஷைகளுக்கு அஷ்டமச்சனிபிடித்துக்கொண்டது. இனிச் சுதேசபாஷைகள் அபிவிருத்தியடைவது கடினம். ஆதலால் நமது சைவசமயம் அபிவிருத்தியடைவதுங் கடினம். நமது சமயம் அபிவிருத்தியடையவேண்டுமாயின் நாம் சுதேசபாஷைகளை யபிவிருத்திசெய்ய வேண்டும். ஆதலால் நாம் நமது சிறுவர்களுக்கு ஆங்கிலபாடசாலைகளில் சுதேசபாஷைகளையும் நன்றாய்க் கற்பிக்க முயலவேண்டும். நம்மவர்களுள் ஆங்கிலங்கற்காதவர்களும் எண்ணிறந்தோரிருக்கிறார்கள். இவர்களுக்குச் சுதேசபாஷையை யதிகமாகக் கற்பிக்கும் பாடசாலைகள் வைத்தல்வேண்டும். அவரவர்கள் தங்கள் தங்கள் வீடுகளில் தங்கள் தங்கள் சிறுவர்களுக்குத் தங்கள் தங்கள் தாய்பாஷைகளை நன்றாய்க் கற்பிக்கவேண்டும். சுதேசபாஷாபிவிருத்தியின்பொருட்டுச் சபைகளைவைத்து நடத்தவேண்டும். சுதேசபாஷைகளில் பாண்டித்தியமுடையவர்களை யாதரித்தல்வேண்டும். பிறபாஷைகளிலுள்ள சிறந்தநூல்களைச் சுதேசபாஷைகளில் மொழிபெயர்க்கவேண்டும். சுதேசபாஷைகளில் பத்திரிகைகள் பல வெளியிடவேண்டும். நமது அருஞ்செல்வமாகிய சுதேசபாஷைகளை யாதரிக்கும்படி நமது அரசாங்கத்தினரை மன்றாடிக்கேட்கவேண்டும். இன்னும் இவைபோன்ற காரியங்களைச் செய்து சுதேசபாஷாபிவிருத்திசெய்தால் நமதுசைவசமயம் அபிவிருத்தியடையும்.

காருணியமுள்ள நமது அரசாங்கத்தார் நமக்குச் சமயப்படிப்பில்லையென்பதைச் சிந்தித்துப் பாடசாலைகளில் மதபோதனைசெய்யப்படவேண்டுமென விரும்புகிறார்கள். அரசர்களின்க்ஷேமத்திற்குக் குடிகளின் தெய்வவழிபாடு காரணமாம். குடிகளின் தெய்வவழிபாட்டிற்கு அவர்கள் சுதேச

யாஷாபிவிருத்தி காரணமாம். ஆதலால் இத்தேசத்தில் சுதேசபாஷைகள் அபிவிருத்தியடையுமாறல் சனங்களுக்குள் நல்லொழுக்கமும் தெய்வபத்தியும் அதிகரித்து அரசாங்கமுஞ்செழித்தோங்கும் இவைபொதுஜனங்களேயன்றி நமதுதேசாபிமானிகளும் அரசாங்கத்தினரும்கவனிப்பதுகடமையாம்.

## கோயில்.

கிறிஸ்தவர்கள்முதலாயினோர் தங்கள் கோயிற்காரியங்களைச்சமயநூற்பயிற்சியுள்ளவர்களைக்கொண்டு நடத்துவிக்கிறார்கள் அவர்கள் கோயில்களிற் செலவிடுந்தொகைபெரும்பாலும் ஜனங்களுக்குச்சமயபோதனைசெய்து அவர்களைச் சமய ஒழுக்கத்தில் நிறுத்திச் சமயாபிவிருத்திசெய்தற்கேசெலவாகின்றது சிவாலயதருமகர்த்தர்களுள் சைவசமயசாஸ்திர உணர்ச்சியும் நல்லொழுக்கமும் சைவாநுட்டானங்களுமுடையவர்கள் மிகவும் அருமை. இவர்கள் தங்களுக்குப பிரியமானவையே சுவாமிக்கும் பிரியமானவை யென மதித்துக கோயில் திரவியங்களைப் பெரும்பாலுந் தாசிகள் நாட்டியங்களுக்கும், காதுக்கினிய வாத்தியங்களுக்கும், கண்ணுக்கினிய தீவர்த்தி மத்தாப்பு வாணவேடிக்கைகளுக்கும், வாய்க்குருசியான உணவுகளுக்குமே செலவுசெய்கிறார்கள் நம்முன்னோர்கள் முற்காலத்துவழக்கத்தின்படி சுவாமிக்கு உபசாரஞ்செய்வதாக வைத்து நடத்திய தாசிகளின் நாட்டியத்தை இக்காலத்தவர்களும் நடத்துவதாகச் சொல்லிக்கொண்டு கண்டோர்க்குக் காமமூட்டுந் தாசிகளை யலங்கரித்தாடச்செய்து தாங்கள் பாபத்திற்குள்ளாவதன்றிக் கடவுளை வணங்கச்செல்வோரையும் பாபத்திற்குள்ளாக்குகிறார்கள். நம்மவர்கள் இலட்சக்கணக்காகச் செலவிட்டுக் கோயில்களைப புதுக்கிக் கும்பாபிஷேகஞ் செய்கிறார்களேயன்றிச் சிறிதளவாயினுங் கோயில்களிற்பூசைசெய்யும் பிராமணர்களுக்கும் ஏனையோர்களுக்குஞ் சமயபோதனை செய்விக்கிறதில்லை. நம்மவர்கள் பலர் புராதனகோயில்களில் நித்தியபூசையையும் நடத்துவிக்காமல் புதியகோயில்களைக் கட்டுவதும், மிகவுஞ் சீரணமடைந்திருக்குங் கோயில்களுககுச் சிறிதளவாயினுஞ் செலவிட்டுச் சீரணோத்தாரணஞ்செய்யாமல் ஒவ்வொருகோயிலுக்கே ஏராளமான பணச்செலவிடுவதும் வழக்கமாயிருக்கிறது நம்முன்னோர்கள் சைவசமயிகளியாவருக்கும் பொதுவாகக்கட்டிவைத்தகோயில்கள் பல ஒவ்வொருவர் சுயாதீனப்பட்டு அதன்வருமானங்கள் அவர்கள் மனம்போனபடிச் செலவாகின்றன. ஆலயதருமகர்த்தர்கள் தங்கள் கோயில்களின் நிலைமைகளையும் அபிவிருத்திகளையும் வரவு செலவு கணக்குகளையும் அச்சிட்டு வெளியிடுகிறதில்லை இதனால் நம்முடைய கோயில்கள் பல அழிந்துபோகின்றன. நம்முடையசமயம் அபிவிருத்தியடையவேண்டுமாயின் ஆலயங்கள் அபிவிருத்தியடையவேண்டும். ஆலயங்கள் அபிவிருத்தியடையவேண்டுமாயின் அவைகள் பொதுஜனங்கள் கூடிய சபைகளால் பரிபாலிக்கபபடவேண்டும். சைவசாஸ்திர உணர்ச்சியுடைய பிராமணர்களைக் கொண்டு பூசைமுதலியன நடத்துவித்தல்வேண்டும். வருமானமிகுந்த கோயில்களில் பாடசாலைகள்வைத்துப பிராமணர்களுக்கும் ஏனை

யோருக்குஞ் சமயசாஸ்திரபோதனை செய்யவேண்டும். ஆலயங்களில் பிரசங்கங்கள் செய்வித்து ஆலயங்களின் விசேடங்களையும் ஆலயங்களிற்பிரதிட்டிக்கும் மூர்த்தங்களின் விசேடங்களையும், உற்சவங்களின் வரலாறுகளையும், ஆலயங்கள் பரிபாலிக்கப்படவேண்டிய ஒழுங்குகளையும்,ஆலயவழிபாட்டின் மேம்பாடுகளையும் விளக்குதல்வேண்டும். உற்சவகாலங்களில் தமிழ்வேதபாராயணமும், வீதிப்பிரசங்கங்களுஞ் செய்வித்தல்வேண்டும். ஆலயங்களின் வரவு செலவு கணக்குகளையும் நிலைமைகளையும் வருடந்தோறும் விவரமாக அச்சிட்டு வெளியிடவேண்டும். ஆலயபரிபாலனம் சமயாபிவிருத்திக்குமாத்திரமன்றித் தேசாபிவிருத்திக்குங் காரணமாம். இதுபற்றியே திருமூலநாயனாரும்:—

> "ஆற்றருநோய்மிகுமவனிமழைகுன்றும்
> போற்றருமன்னரும்போர்வலிகுன்றுவர்
> கூற்றுதைத்தான்றிருக்கோயில்களானவை
> சாற்றியபூசைகடப்பிடிற்றானே."

எனத்திருவாய்மலர்ந்தருளினர். ஆதலால் குடிகளை அவரவர்கள் சமயவொழுக்கத்தில் நிறுத்தி தெய்வவழிபாடுசெய்விப்பது அரசாங்கத்தின் கடமையுமாகும்.

## பாடசாலை.

கிறிஸ்தவர்கள் உலகெங்கும் பாடசாலைகள் வைத்துத் தங்கள்சமயத்தினர்க்கேயன்றி எல்லாச் சமயத்தார்க்குந் தங்கள் சமய நூல்களைக் கற்பிக்கிறார்கள். சைவ சமயிகள் அவர்களைப்போல் உலகெங்கும் பாடசாலைகள் வைத்து எல்லா மதத்தார்க்குஞ் சைவ சமயநூல்களைக் கற்பிக்காவிடினும், தங்கள் தேசத்தில், தாங்கள் வைத்திருக்கும் பாடசாலைகளில், தங்கள் மதத்தினர்க்கேனும், தங்கள் சமயநூல்களைப் போதிக்கலாமல்லவா? இவர்கள் இவ்வாறு செய்யாவிட்டால்,

> "கற்றதனாலாயபயனென்கொல்வாலறிவ
> னற்றாடொழாஅரெனின்."

என்னுந் திருக்குறளின்படி இவர்கள் வைத்திருக்கும் பாடசாலைகளினால் என்னபயனுண்டாம்? நம்மவர்கள் தங்கள் சிறுவர்களுக்குத் தங்கள் சமய நூல்களைக் கற்பிப்பதை அசட்டை செய்வது மாத்திரமன்றிக் கிறிஸ்தவர்கள் நம்மை "அஞ்ஞானிகள்" என மதித்து நம்மவர்களைக்கிறிஸ்துமதத்திற் சேர்க்கவேண்டி வலை வீசுவதுபோல் வைத்திருக்கும் பாடசாலைகளில் தங்கள் சிறுவர்களை விட்டுச் சைவசமயாநுட்டானங்களை நிந்தித்துக் கிறிஸ்து சமயாநுட்டானங்களைச் சிலாகிக்கவும் அநுட்டிக்கவுஞ் செய்கிறார்கள். இதைக் காட்டிலுங் கொடிய சமயத்துரோகம் வேறில்லை!. இனியாவது நம்மவர்கள் நமதுபாடசாலைகளில் நமது சமயநூல்களைக்கற்பிக்க வேண்டும். நம்மவர்கள் வைத்திருக்கும் பாடசாலைகளில் பலசமயத்தினருங் கலந்துவாசி

க்கக் கூடிய பொதுவகையான சமய நூல்களில்லாதிருத்தலாலும், இப்பாட சாலைகளில் சமய நூல்களைப் போதிப்பது அசாத்தியமெனச் சிலர் எண்ணு கிறார்கள். இது சிறிது கடினமாயிருக்கலாமாயினும் பணச்செலவுசெய்தால் அசாத்தியமாகமாட்டாது அல்லாமலும், சைவசமயிகள் கிறிஸ்தவர்களைப் போல் பாடசாலைகள்வைத்து அதில் மற்றைய பாடங்களோடு சைவசமயநூல் களையும் ஏன் கற்பிக்கலாகாது?

சிலர் சைவம் வைணவமுதலிய மதவேற்றுமைகளால் சனங்களுக்குள் ஒற்றுமைகெட்டுத் தேசாபிவிருத்தி குன்றி விடுமென வெண்ணிக்கொண்டு மலையைக்கிள்ளி எலியைப்பிடிப்பாரையொத்து அம்மத வேற்றுமைகளை யொழித்துப் பலர்க்கும் பொதுவகையான சில தர்மங்களைமாத்திரந் திரட்டி யச்சிட்டுக் கற்பிக்கிறார்கள். இவர்கள் செய்யுஞ் சமயபோதனையும் நம்மவர் கள் இதுவரையிற்செய்துவந்த சிறப்பு வகையான வழிபாடுகளுக்கு இடையூ றாக முடிகின்றது. ஆதலால் நம்மவர்கள் ஒவ்வொருவரும் அவரவர்கள் முன் னோர்கள் செய்த தெய்வ வழிபாடுகளையே அவரவர்கள் சந்ததியார்களுஞ் செய்து வருவதற்கான சமயபோதனைசெய்தலே உத்தம மாகும்.

இப்போதுள்ள ஆங்கில பாடசாலைகளில் வாசிப்பவர்கள் பெரும்பாலா ர்க்குச் சைவ சமயாநுட்டானங்களில்லா திருத்தலினால் சில வைதிக சைவ ர்கள் ஆங்கில பாடசாலைகள் வைக்கப் பிரியபபடுகிறதில்லை. இக்காலத்தில் சுதேச பாஷையொன்றையே வாசிப்போர் குறைந்தும் ஆங்கிலங்கற்போர் அதிகப்பட்டு மிருத்தலாலும், ஆங்கிலப்பயிற்சி யுடையவர்கள் அதிகப் பிரவ ர்த்தகர்களாகவும் பலதேசங்களுக்குஞ் சென்று எளிதிற் சமயபோதனைசெய் யக் கூடியவர்களாகவு மிருத்தலினாலும், ஆங்கில பாடசாலைகள் வைத்து அவற்றில் சுதேசபாஷைகளும் சைவசமய நூல்களும் ஒழுங்காகக்கற்பிக்கப் பட்டால் ஆங்கில பாடசாலைகளே சைவ சமயாபி விருத்திக்கு இன்றியமை யாத சாதனமாகு மென்பதை வைதிக சைவர்கள் உணர்தல் வேண்டும்.

நம்மவர்கள் இலட்சக் கணக்காகச் செலவிட்டுக் கோயில்களிற் கைங்க ரியஞ்செய்வதையே பரமபதிபுண்ணியமாக எண்ணுகிறார்களே யன்றி, பிராமணர்களும் ஏனையவர்களும் சைவ நூல்களைக் கற்றற்கும் அவற்றின்படி யொழுகிக் கோயிற்பூசை முதலியவற்றைச் செய்தற்கும் முதற்கருவியாகிய பாடசாலைகளை வைத்து நடத்துவதற்குச் சிறிதுங் கருதுகிறார்களில்லை. இவ் வாறுசெய்யாமைக்கும் இவர்கள் கல்வியறிவின் குறைவே காரணமாகும். கோயில்களைக் கட்டிப பூசை புரிவது ஆன்மாக்கள் கடவுளை வழிபட்டுய்யுட் பொருட்டேயன்றி எங்குமா யாவையுமா யிருக்குங் கடவுளுக்கு உபகரித்தற் பொருட்டன்று. ஆகையால் கடவுளை வழிபடுவோரில்லாதகாலத்தில் கோ யில்கள் என்னபயனைத்தரும்? அன்றியும் சமயசாஸ்திர உணர்ச்சியற்றுச் சம யக்குருடர்களா யிருபபவர்களுக்குக் கோயிலில் உற்சவாதிகள் செய்து காட்

கிராமங் கிராமங்களாகக் கிறிஸ்தவர்களாக்கி வருகின்றார்கள். இதை நம்மவர்கள் பார்த்துக் கொண்டு கவலையற்றிருப்பது மிகக்கொடிய சமயத் துரோகமாகும். ஆதலால் நாம் இனி விரைந்து எங்குஞ் சைவசமயப் பிரசாரகர்களையனுப்பிச் சைவசமயபோதனை செய்தல்வேண்டும். சைவப் பிரசாரகர்களுக்குப் பலதேச சரித்திரஞானமும், பலசமய வாராய்ச்சியும், ஆங்கிலப் பயிற்சியும், போதனா சத்தியு முடையவர்களாகப் பயிற்சி செய்வித்து அவரவர்களுக்குத்தக்க பட்டங்களுஞ் சம்பளமுங் கொடுக்கவேண்டும். நம்மவர்களுள் தாழ்ந்த வருணத்தார் எவ்வளவு கல்விமான்களாகவுஞ் சீலமுடையவர்களாகவுமிருந்தாலும் உயர்ந்தவருணத்தார் அவர்கள்செய்யுஞ் சமயபோதனையைக் கேட்க லச்சைகொள்ளுகின்றார்கள். இவர்கள்வேறுசாதியாரும் பிறசமயத்தவருமான ஐரோப்பியர் செய்யுஞ் சமயபோதனைகளிலும், அவர்களிடம் உத்தியோகஞ் செய்வதிலும் பாராட்டாத சாதிபேதங்களை நம்மவர்கள் செய்யுஞ் சமயபோதனையிற் பாராட்டுகின்றார்கள். இது விரும்பப்படுவதன்றாயினும், இக்காலத்தில் சைவப் பிரசாரகஞ் செய்யக்கூடிய சைவப் பிராமணர்கள் மிகவும் அரியராயிருத்தலினால் இவர்களையுங் கல்விமான்களாக்கிச் சைவப்பிரசாரகஞ் செய்வித்தல் வேண்டும்.

இத்தேசத்தில் பெரிய நகரங்களில் மாத்திரம் சைவப் பிரசங்கங்கள் நடக்கின்றன. கிராமங்களில் நடப்பது மிகவும் அருமை. கிராமவாசிகள் பட்டின வாசிகளைப்போலன்றிச் சிறிதளவாயினுஞ் சமயாநுட்டானங்களை அநுசரிப்பவர்களாயிருக்கின்றார்கள். ஆயினும் இவர்கள் பஞ்சகாலங்களில் கிறிஸ்தவர்கள் செய்யும் உதவிகளுக்காசைப்பட்டுக் கிறிஸ்தவராய் விடுகின்றார்கள். சென்னைக் கருகிலுள்ள தேவாரம் பெற்ற திவ்விய க்ஷேத்திரமாகிய திரு இலம்பையங்கோட்டூர் என்னுங் கிராம வாசிகளனைவரும் கிறிஸ்தவர்கள் முயற்சியால் ஒருவர்தப்பாமல் கிறிஸ்தவர்களாயிருக்கின்றார்கள். இதுபோலவே அனேக கிராமவாசிகள் மாறிவிட்டார்கள். ஆதலால் சைவசமயிகளாகிய நாம் நகரங்களில் மாத்திரமன்றிக் கிராமங்களுக்குஞ் சைவப்பிரசாரகர்களை யனுப்பிச் சைவ சமய போதனைசெய்து சைவ சமயாநுட்டானங்களையுஞ் சைவசமயாபிமானத்தையும் அபிவிருத்திசெய்யவேண்டும்.

தொழிலாளிகளும், மற்றவர்கள்பலரும், பிரசங்கங்கள் செய்யு மிடங்களுக்குத் தாங்களே வலிந்து செல்வதில்லை. இவர்களே பெரும்பாலுங் கூச்சமின்றி மகமதியரோடு அளவளாவி அல்லா பண்டிகையுங் கொண்டாடுகிறவர்கள். இவர்கள் திருந்தும்பொருட்டுப் பலஜனங்கள் கூடும் வீதிகளிலும், சந்தைகளிலும், திருவிழாக்களிலும் வீதிப்பிரசங்கங்கள் செய்யப்படவேண்டும்.

சுதேச பாஷைகளில் மாத்திரமன்றி ஆங்கிலமுதலிய பிறதேசபாஷைகளிலும் நமது சமய உண்மைகள் சனங்களுக்குப் போதிக்கப்பட வேண்டும்.

இக்காலத்தில் ஆங்கிலம் உலகெங்கும் பரவியிருப்பதனால் ஆங்கில விற்பு த்தி யுடையவர்களைப் பழக்கிவிட்டால் அவர்களைக்கொண்டே உலகெங்குஞ் சைவசமயாபிவிருத்தி செய்யலாம். இப்பரதகண்டத்தில் பலவிதபாஷை பேசுவோருள்ளும் சைவசமயிகளிருக்கிறார்கள். இவர்களுக்கு நமது சமயா சாரியர்கள் பிரபாவங்களும் சைவசித்தாந்தமும் தெரியாது. இவர்களுக்கெல் லாம் அவ்வப்பாஷைகளில் நமது சமயநூல்களைப் போதிக்கவேண்டும். சில வைதீகச் சைவர்கள் தீக்கை பெற்றவர்களுக்கு மாத்திரஞ் சைவநூல்களைப் போதிக்கலாமென வெண்ணிக்கொண்டு தீக்கைபெறாதவர்களுக்குப் போதி க்கிறதில்லை. முற்காலத்தில் நம்மவர்களுக்குச் சிறுபோதிலேயே சைவநூற் பயிற்சியுஞ் சைவ சமயாநுட்டானப் பயிற்சியுஞ் செய்யப்பட்டு வந்தது. அவ ர்களுக்கு ஆங்கிலப்படிப்பும் பலசாதியாரின் கூட்டுறவுமில்லை. ஆகையால் அவர்களுக்குச் சமயதீக்கையில் இயற்கையாகவே விருப்பமிருந்தது. இக்கா லத்துச் சிறுவர்களுக்குச் சைவ சமயநூலுணர்ச்சியுஞ் சைவ சமயாநுட்டா னபபழக்கமுமில்லை. பலசாதிப்பிள்ளைகளின் நேசமும் பல பிறசமயத்தவ ரின் போதனைகளுமே இவர்களுக்குச் சொந்தமா யிருக்கின்றன. இவர்க ளுக்குச் சைவசமய உண்மைகளைப் போதித்தாலன்றி இவர்கள்சைவதீக்கை பெற்றுக்கொள்ள மாட்டார்கள். ஆகையால் இவர்களுக்குக் குருமுகமாயறி யவேண்டிய தீட்சை உபதேசம் மந்திர முதலியவற்றை யொழித்துப் பொதுவகையானச் சைவ சமய உண்மைகளைத் தாராளமாய் ஆங்கிலமுத லிய எல்லாப்பாஷைகளிலும் போதிக்க வேண்டும்.

இக்காலத்தில் சைவப் பிரசாரகர்களென வெளிவரும் வித்துவான்க ளுள் சிலர் சிறிதுஞ் சமயாபிமானமின்றிப் பொருளீட்டுதலையே மதித்துப் பிரசங்கஞ்செய்கிறார்கள். சிலர் பிற வித்வான்களிடத்திற் குற்றங் கண்டு பிடித்தலும், பிற சமயங்களை மனம்போனபடி தூஷித்தலுமே சமயப் பிரசா ரகமெனவெண்ணி அவற்றையே தங்கள் தொழிலாக வைத்திருக்கிறார்கள். இதனால் சைவசமயிகளுக்குள் ஒற்றுமை குறைந்து சமயாபிவிருத்திக்கே தீங்கு நேரிடுகின்றது. ஆதலால் இனிச்சைவ வித்துவான்கள் பலரும் பொ ருள் வருவாயை யெதிர்பாராமலும் பிறர்குற்றங்களைப் பாராட்டாமல் அவற் றை யபிப்பிராயபேதங்களாகக் கொண்டு ஏனைய வித்துவான்களோடு கலந் தும், பிறசமய தூஷணங்களை முற்றிலும் நீக்கியும் சைவசமயாபிவிருத்தி யொன்றையே கருதிச் சைவப்பிரசாரகஞ் செய்தல் வேண்டும்.

## மடங்கள்.

முற்காலத்தில் அரசர்களும் சைவமடாதிபதிகளும் சைவசமயத்தைப் பரிபாலித்தார்கள் இக்காலத்தில் சைவசமயத்தைப் பரிபாலிக்கவேண்டிய வர்கள் மடாதிபதிகளே. குலமகட்குக்கொழுநனும், குடிகளுக்கு அரச னும் குழந்தைக்குத் தாய்தந்தையும் பயிர்களுக்கு மேகமும் பற்றுக்கோடாவ துபோல சைவசமயிகளுக்குப் பற்றுக்கோடாயிருப்பவர்கள் சைவமடாதிபதி

களே. இவ்வாறிருந்தும் இக்காலத்து மடாதிபதிகள் சிலர் தங்கள் உயர்பத வியையும் பொறுப்பையுங் கருதாமல் மடங்கள் தங்கள் சுயநலத்திற்கே ஏற் பட்டன போல அவற்றின் திரவியங்களைத் தங்கள் மனம்போனபடி யெல் லாஞ் செலவிட்டு மடங்களை யழிக்கிறார்கள். இவர்கள் சைவசமயத்தின் தற் காலநிலைமையைச் சிந்தித்து மனம் நடுங்குகின்றார்களில்லை. தங்களுக்குப் பின் மடாதிபதிகளால் பின்னும் அழியாதவண்ணம் மடங்களுக்குப் பாதுகா ப்புகளைச் செய்துகொள்ளுகிறதில்லை. சைவசமயிகள் தங்கள் சமயாநுட்டா னங்களைக் கைவிடாதிருக்கக் காலதேசவர்த்தமானங்களையநுசரித்து தகுந்த உபாயங்களைச் செய்கிறதில்லை. இவர்களுள் கல்விமான்கள் மிக அருமை, ஆதலால் இவர்களுள் பெரும்பாலார்க்குப் பிறசமயிகள் எவ்வாறு சமயாபிவி ருத்திசெய்கிறார்களென்பதும் தாங்கள் எவ்வாறு செய்யவேண்டும் என்ப தும் தெரியாது போலும். ஒருக்கால் தெரிந்திருப்பினும் உலக இன்பத்தில் வைத்த மயக்கத்தாலும், செல்வச்செருக்காலும், சைவசமயிகளல்லாத பிற ரின் கூட்டுறவின் வன்மையாலும், இவர்களிடத்தே செல்லும் சைவசமயிக ளுள்ளும் பெரும்பாலார் தங்கள் சுயநலத்தையே நாடிச்செல்வதனாலும். இவர்கள் தங்கள் கடமைகளைச் செய்யக் கருதுகின்றார்களில்லை போலும், இவர்களுள் முற்றிலும் தங்களை மறந்திருப்பவர்கள் போக மிகக்கல்வியாளர் களும் மேதாவிகளுமாகிய மடாதிபதிகள் திருவாவடுதுறைமுதலிய விடங்க ளில் இல்லாமற்போகவில்லை. இவர்கள் மனம்வைத்தால் விளையாட்டாகவே உலகமெங்கும் சைவசமயமாக்கிவிடலாம். ஆதலால் இன்னோரே முற்பட்டு வந்து மடங்களையெல்லாம் சீர்திருத்தவேண்டும். இவர்கள் இனி ஒருகண மும் சும்மாவிராமல் உடனேமுற்பட்டு ஐரோப்பியர்வழிகளை மேற்கொண்டு தங்கள் மடங்கள் பிற்காலத்தில் அழியாதிருப்பதற்கு வேண்டிய பாதுகாப்பு களைச் செய்து கொண்டு சைவசமயிகளுக்கெல்லாம் சமயாபிமானத்தை ஊட் டவேண்டும். முற்காலத்தில் சுதேச அரசாங்கங்கள் பல ஒன்றோடொன்று சேராமல் தனித்தனியாக இருந்து ஒவ்வொன்றுமழிந்தன. அப்படிச் சைவ மடங்களும் அழியாவண்ணம் யாவும் ஒன்றுசேரவேண்டும். பிரிட்டிஷ் அர சாங்க முதலிய ஐரோப்பிய அரசாங்கங்களுள் அரசர்கள் பார்லிமெண்டு என்னும் சபையைவைத்துக்கொண்டு அதன்மூலமாக அரசு செலுத்துவது போல் ஒவ்வொருமடமும் மிகமேதாவிகளுஞ் செல்வர்களுங் கூடிய சபை யை முன்வைத்து மடங்களின் காரியங்களை நடத்துதல்வேண்டும். முன்ன மே ஆங்காங்குத் தோன்றியுள்ள சபைகளின் நடவடிக்கைகளைப் பரீட்சித்து அவற்றை யாதரித்தல் வேண்டும். முற்காலத்தில் இருப்புப்பாதை தபால் அச்சுக்கூடங்கள் அரசாங்கசமயப்பொறை முதலிய நன்மைகள் இல்லாதிரு ந்தும் அக்காலத்தில் சைவமடாதிபதிகள் தமிழ்வழங்காத காசிமுதலிய தூர தேயங்களிலும் சைவசமயாபிவிருத்தி செய்தார்கள். இக்காலத்தில் அவ்வநு கூலங்களெல்லா மிருப்பதோடு ஆங்கிலபாஷையொன்று சர்வஜனங்களும் அறிந்தபாஷையாயிருக்கிறது. ஆகையால் இக்காலத்தில் சைவசமயாபிவிரு

த்திசெய்வது மடங்களுக்கு மிகவும் எளியது. இவ்வாறிருந்தும் சைவசமயம் முன்னிலும் மிகவும் குன்றியிருக்கிறது. இதற்குக் காரணம் நமது சிறுவர்களுக்குச் சைவசமயபோதனை யில்லாமையே. ஆதலால் மடாதிபதிகளாகிய நமது குருமூர்த்திகள் மிகவும் கருணைகூர்ந்து பலவிடங்களில் ஆங்கிலபாடசாலைகள்வைத்து அவற்றின் மூலமாக சிறிது சிறிதாக சிறுவர்களுக்குச் சைவசமயபோதனை செய்யவேண்டும். இது ஒன்றுமாத்திரஞ் செய்வார்களானால் மற்ற அநுகூலங்களெல்லாம் தாமே உண்டாகும். இவர்கள் கீர்த்தி உலகெங்கும் பரவும். இவர்களைப் பலமதஸ்தருங் கொண்டாடுவார்கள். முன்னோர்கள் இவ்வாறு இதுவரையில் செய்யாமையால் இதை அசம்பிரதாயமென அசட்டைசெய்யலாகாது. காலதேசவர்த்தமானங்களை நோக்கிச் செய்தால் இதுவேபிற்காலத்தில் பெரும்பயனை விளைவிக்கும் உத்தமோத்தம சம்பிரதாயமாகிவிடும்.

## முடிபுரை.

சைவப்பிரசாரகர்கள் பலர் சைவப்பிரசங்கங்கள் செய்வதிலும் சைவநூல்களை வெளியிடுவதிலுமே தங்கள் கவனத்தைச்செலுத்திக்கொண்டு தங்களையாதரிப்பாரின்மையால் குறைகூறிக்கொண்டிருக்கிறார்களே யன்றி தங்கள் சமயத்தின் அபாயநிலைமையைப் பலரும் அறிந்து பதைக்கும்படி உபநியசிப்பதில்லை. இவர்கள் இவ்விதவியாசங்களை லட்சக்கணக்காக வெளியிட்டும் உபநியசித்தும் சனங்களுக்குள் சமயாபிமானத்தை எழுப்பி சமயபரிபாலனஞ்செய்விக்கவேண்டும். திருச்சிற்றம்பலம் வாழ்க.

---

திருச்சிற்றம்பலம்.

# சைவசித்தாந்தமகாசமாஜம்.

சைவத்தின்மேற்சமயம்வேறிலையதிற்சார்சிவமாந்
தெய்வத்தின்மேற்றெய்வமில்லெனுநான்மறைச்செம்பொருள்வாய்
மைவைத்தசீர்த்திருத்தேவாரமுந்திருவாசகமு
முய்வைத்தரச்செய்தநால்வர்பொற்றாளெம்முயிர்த்துணையே.

இம்மகாசமாஜம் 1905௵ தாபிக்கப்பட்டது.

இம்மகாசமாஜத்தின் நோக்கங்களாவன:—

(1) இந்தியாவில் பற்பல விடங்களில் வருடத்திற்கொருமுறை மகா ஜனக்கூட்டங்கூட்டிப் பல சைவ சபைகளையும், சைவப்பிரசாரகர்களையும் ஏனைய சைவாபிமானிகளையும் வருவித்துச் சைவசமய உண்மையை விளக்குதல்.

(2) இந்த இராஜதானியில் பற்பலவிடங்களிலும் பற்பல பிரசங்கங்கள் நடைபெறச்செய்தல்.

(3) இந்த இராஜதானியெங்குஞ் சைவசித்தாந்தசபைகளைத்தாபித்தல்.

(4) பற்பல சுதேசபாஷைகளில், புத்தகங்களும், பத்திரிகைகளும், துண்டு பத்திரிகைகள் முதலியனவும் வெளியிடுதல், முக்கியமாய்திவ்வியாகமங்களையும் ஏனைய ஸமஸ்கிருத நூல்களையும் சுதேச பாஷைகளிலும் ஆங்கிலத்திலும் மொழிபெயர்த்தல், சுதேசபாஷைகளிலுள்ள சிறந்த நூல்களை ஆங்கிலத்திலும் பிறசுதேச பாஷைகளிலும் மொழிபெயர்த்தல் முதலியன.

(5) திவ்வியாகமங்கள் முதலிய பலநூல்களையுஞ் சேகரித்துப் புத்தகசாலையமைத்தல்.

(6) முன்னமே தாபிக்கப்பட்டிருப்பனவும், இனி இம் மகாசமாஜத்தாலும், இம்மகாசமாஜத்தின் மூலமாகப் பற்பலசபைகளாலுந் தாபிக்கப்படுவனவுமான பாடசாலைகளில் நீதி நூற்போதனையும் மதபோதனையுஞ் செய்வித்தல்.

(7) நம்மவர்களுள் எளிய கீழ்வகுப்பாருக்கும் அவ்விதபோதனைகளைச் செய்தல்.

(8) இம்மகாசமாஜத்தின் நோக்கங்கள் நிறைவேறும்பொருட்டு மடாதிபதிகள் தேவாலய அதிகாரிகள் ஆகிய இவர்களின் உதவியையும் கூட்டுறவையும் பெறுதல். மடங்களுங் கோயில்களும் அபிவிருத்தியடைய உதவி செய்தல்.

சைவசமயிகளியாவரும் இம்மகாசமாஜத்தின் அங்கிகளாகலாம்.

இதில் அங்கிகளாவோர் ஒவ்வொருவரும் வருடம் ஒன்றுக்கு ஒரு ரூபாவுக்குக்குறையாமல் சந்தாசெலுத்தவேண்டும்.

இம்மகாசமாஜத்திற்கு ஒவ்வொரு சைவசபையும் சகோதரசபையாகவும், ஒவ்வொரு சிவநேயரும் அங்கியாகவும் இருந்து சைவசமயபரிபாலனம் பண்ணுவித்துச் சிவபிரானுர் திருவருளுக்குரிய ராகுக. சுபம்.

திருச்சிற்றம்பலம்.

---

# சென்னைச்சிவனடியார் திருக்கூட்டம்.

இச்சபை கலி ஐயாயிரத்தில் விளம்பிஞு மார்கழிமீ 12உ 1898ஞு டிசம்பர்மீ 25உ) ஆதிவாரம் திருவொற்றியூர் ஸ்ரீதியாகராஜப்பெருமானார் சந்நிதியில் தாபிக்கப்பட்டுச் சென்னையில் நடைபெற்று வருகின்றது இச்சபை அரசாங்கத்தாரால் 1860 ஆவது வருடத்து 21 ஆவது சட்டத்தின்படி ரிஜிஸ்டர் செய்யப்பெற்றிருக்கிறது. இச்சபையார் தங்களிருப்பிடமாக 3500 ரூபா மதிப்புள்ள சபாமண்டபங்கட்டி வைத்திருக்கிறார்கள்.

இச்சபையார் அநாதிமலமுத்தராகிய சிவபெருமானே முழுமுதற்கடவுளெனவும், வேதசிவாகமங்களே அவரருளிச்செய்த முதனூல்களெனவும், அவற்றுள் வேதம் பொதுநூல் சிவாகமம் சிறப்புநூலெனவும், தேவாரத்திருமுறைகளே அவற்றின்சாரமாகிய தமிழ்வேதத் திருவருட்பாக்களெனவும், விபூதி ருத்திராக்கங்களே பசுபோதங்களைய வல்ல சிவ சின்னங்களெனவும், ஸ்ரீ பஞ்சாக்கரமே வீடுபேறருளும் சிவமூலமந்திரமெனவும், குரு லிங்க சங்கம வழிபாடே சிவபெருமானார்க்குச் செய்யப்படும் உத்தமோத்தமமாகிய வழிபாடெனவும், மதித்தொழுகுங் கொள்கையையுடையவர்கள்.

இவர்கள் பெருங்கூட்டமாகக்கூடிச் சிவக்ஷேத்திரங்களையடைந்து விதிப்படிப் பெருமானார்க்குத் திருமஞ்சனமாதியுபசாரங்களைச் செய்வித்துச்சிவாலயவழிபாடுசெய்தும், உழவாரத்திருப்பணிசெய்தும், புண்ணிய தீர்த்தங்களில் மூழ்கியும், கிரிவலம் வந்தும், பெரியோர்களைத்தரிசித்தும், ஆங்காங்குக் கூடியிருக்குஞ் சிவனடியார் திருக்கூட்டங்களுடன் அளவளாவியும், சைவ சபைகளில்லா விடங்களிற் சபைகளைச் சேர்ப்பித்தும், மனங்கசிந்துருகுமாறு தமிழ்வேதபாராயணம்பண்ணியும், சைவப்பிரசங்கஞ்செய்தும், வித்தியாசாலை வைத்தும், யாவரும் சொற்பவிலைக்கு வாங்கிவாசித்து உய்யும் வண்ணம் சமய நூல்களை யச்சிட்டும், பலரும் இலவசமாக வாசிக்குமாறு சிவஞானமுனிவர் பேரால் புத்தகசாலைவைத்தும், உபசபையாகத்தங்கள் சபாமண்டபத்தில் "பாலசைவசபை" தாபித்து நடத்தியும் சைவசமயாபிவிருத்திசெய்து வருகிறார்கள்.

இச்சபையார் ஒவ்வொருயாத்திரையிலும், ஐம்பதுமுதல் நூறுபேரளவில் கூடிப்புறப்பட்டு வீண்காலம் போக்காமலும், நடை, நித்திரையின்மை, அகாலபோஜனமுதலியவற்றால் நேரிடுஞ் சரீரப் பிரயாசையைச் சற்றுங்கவனியாமலும், பொருள்செலவைப் பொருள்செய்யாமலும், அன்புமேலீட்டினால் செய்துவரும் சிவாலய வழிபாடாதிகளைக்காணும் பிராமணர் முதலிய எல்லாவருணத்தினரும் சந்நியாசிகள் முதலிய எல்லா ஆச்சிரமத்தினருமாகிய சிவநேயச்செல்வர்கள் பலரும் பத்திரிகை வெளியிட்டும் பறையறைவித்தும் இச்சபையார் வருகையைப் பேருவகையுடன் பலருமறிய விளம்பரப்ப

டுத்தி வீதிமுதலியன வலங்கரித்துச் சர்வோபசாரத்துடன் எதிர்கொண்டு வரவேற்றும், ஆலயவழிபாட்டிற்கு வேண்டிய பல உதவிகளைச்செய்தும், மாகேசுரபூசைசெய்வித்துந் திருவிழாக்கொண்டாடி, இதுபோல் சபைகளை யேற்படுத்திச் சிவாலய வழிபாடாதிகள் செய்து வருகிறார்கள்

இச்சபையார் இதுவரையில் 160 தலங்களுக்கு யாத்திரைசெய்தார்கள். பாடசாலைப்பிள்ளைகளுக்கு சைவநூல்களும், சிவாலயவழிபாடுங் கற்பிக்கிறார்கள். முதல் முதலாகப் பன்னிரண்டு தேவாரத்திருமுறைகளைத்திரட்டி அச்சிட்டுச் சொற்பவிலைக்குக் கொடுத்தும், தேவாரத் திருமுறைகளுக்குத் திருவீதி மகோற்சவங்கள் செய்வித்துஞ் சென்னை முதலான பலவிடங்களையுந் தமிழ்வேத பாராயண மயமாகச் செய்து விட்டார்கள். இச்சபையின் வரவு செலவு கணக்குகள் ஆரம்பமுதல் இதுவரையில் மிகவும் ஒழுங்காக வைக்கப்படுவது மன்றி வருடாந்தரச் சபாக்கிரந்தங்களோடு விவரமாக அச்சிட்டு வெளியிடப்படுகின்றன. இச்சபையில் இப்போது சற்றேறக்குறைய 100 சாமாசிகாகளிருக்கிறார்கள் இவர்களுள் பெரும்பாலார் நான்கணாவும், சிறுபாலார் எட்டணாமுதல் இரண்டுரூபாவரையிலும் மாத சந்தா உபகரிக்கிறார்கள்.

சித்தாந்தசரபம்—அஷ்டாவதானம்

பூவை - கலியாணசுந்தரமுதலியார்

காரியநிர்வாகசபைத்தலைவர்.

சென்னை.
25 – 12 – 11.

இ. ஆதிமூலமுதலியார்
காரியதரிசி.